# மதுரை சுதந்திரத்
# தமிழ் வாசகம்

முதல் வகுப்பு








பாலகிருஷ்ணக் கோன்.
ரை சென்னை.

மதுரை

# சுதந்திரத் தமிழ் வாசகம்

## முதல் வகுப்பு

Approved by the Text Book Committee Madras vide C. List Page 10 for Ele. Schools 4-5-'55.


பண்டித G. விசுவாசம்

தமிழாசிரியர்

ஸெயின்ட் மேரீஸ் உயர்தரக் கலாசாலை

மதுரை





இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்

மதுரை :: :: சென்னை

பதிப்புரிமை] 1955 [விலை அணா 4

முதற் பதிப்பு —1949
மறு பதிப்பு — 1955



## முகவுரை

அரசாங்கத்தாரால் வகுக்கப்பெற்ற பாடத்திட்டங்களுக்கு இணங்க 'மதுரைச் சுதந்திரத் தமிழ் வாசகம்' என்ற பெயருடன் வெளிவரும் வாசக வரிசையில் இது முதல் வகுப்பிற் குரியதாகும்.

இப்புத்தகம் தாய்மொழியைப் பயிலும் சிறுவர்கள், விளையாட்டு முறையில் எழுத்துக்களை எழுதவும், படங்களைப் பார்த்து, அவற்றின் கருத்துக் கேற்பப் பெயர்களைக் கூறவும், சிறு சிறு வாக்கியங்களை அமைக்கவும் தக்க முறையில் அமைந்துள்ளது.

இப்புத்தகத்தில் 300 சொற்கள் சிறுவர்கள் இலகுவாய்க் கற்றறியும் வண்ணம் சேர்க்கப்பட்டுள்ளன. சிறு கதைகள் இளைஞர்களுக்கு மகிழ்ச்சியைத் தரும். ஆகவே, அவர்களுக்கு ஊக்கத்தையும், உற்சாகத்தையும் உண்டாக்கக்கூடிய கதைகளை இயற்றுவித்துப் பாடங்கள் கற்பிப்பதற்கு அனுகூலமான படத் தொகுதிகள் இதில் சேர்க்கப்பெற்றுள்ளன.

இப்புத்தகம் சிறுவர்களுக்குப் பெரிதும் பயன் தரும் என நம்புகிறேன்.

தொகுப்பாளர்.

எக்ஸெல்ஸியர் பவர் பிரஸ், மதுரை.—'55.

## மதுரை

# சுதந்திரத் தமிழ் வாசகம்

## முதல் வகுப்பு






# அம்மா அப்பா

# பாப்பா படம்

## ட ப ப் ம ம் அ

குறிப்பு: சுலபமான எழுத்துக்களைக் கொண்டுள்ள அட்டைக் கூட்டங்களில் இம்மாதிரிச் சொற்கள், படங்கள் அடங்கிய எழுத்துக்களைப் பொறுக்கிச் சொற்களை சேர்க்கவும்.





பட்டம் வட்டம்





தம்பட்டம் பழம்





சக்கரம் வளயம்



கண்



கங்கணம்



மரம்



ஏற்றம்



ஊஞ்சல்



கலயம்





# பம்பரம்　　நகம்





# சன்னல்　　சங்கம்

## க ங ச ஞ ட ண த ந

## ப ம ய ர ல வ ழ ள ற ன

குறிப்பு: முந்தின பாடங்களில் படித்த எழுத்துக்களையும், சொற்களையும் திரும்பத்திரும்ப எழுதும்படி சொல்லவும்.

## படங்களின் பெயர்களைச் சொல்



### இந்தப் படங்களைக் காட்டு :

| | | | |
|---|---|---|---|
| கண் | பழம் | பட்டம் | சன்னல் |
| நகம் | கலயம் | வளயம் | பம்பரம் |
| மரம் | சக்கரம் | வட்டம் | ஊஞ்சல் |



அம்மி



ஆணி



இறகு



ஈ



உரல்



ஊதல்

குறிப்பு: ஒவ்வொரு எழுத்தும் சித்திரம் என்றே நினைத்து மாணவர் எழுதிப் பழகவேண்டும்.



எருமை

1

ஒன்று



ஏர்



ஓடம்



ஐவர்



ஔவை



காகம்



கால்



மான்



இரதம்



விசிறி



பல்லி



சீசா



பீப்பாய்



தீபம்

---

பாபா வாவா விசிறி வீசு

காகா வாவா தீபம் திரி



உழக்கு



குடம்



குருவி



சூரியன்



பூட்டு



கூண்டு



எருது



கெண்டி



பெட்டி

---

மர உழக்கு
மண் குடம்

கெண்டி எடு
எட்டு எருது

  

எடு சேவல் பேனா

5  

ஐந்து கழுதை குதிரை

  

ஒட்டகம் தொட்டி தொப்பி

---

| | | | |
|---|---|---|---|
| எடு | எழுது | தொப்பி | நான்கு |
| கழுதை | வால் | ஐந்து | தொட்டி |





ஓலை சோளம் மோதிரம்





வௌவால் கோலம் கௌளி

ஓலை ஏடு
மோதிரம் போடு

வௌவால் பறக்கும்
கௌளி கத்தும்

சேர்த்துப் படி :

| | |
|---|---|
| ப | டம் |
| ம | |
| த | |
| இ | |

| | |
|---|---|
| பா | டம் |
| மா | |
| ஓ | |
| கூ | |

| | |
|---|---|
| வ | ட்டம் |
| க | |
| ப | |
| ம | |

## இவை என்ன ?





# தாயார் தந்தை மகன்
# அண்ணன் தம்பி மகள்
# அக்காள் தங்கை ஆடு
# அத்தை மாமா மரம்
# வீடு வாசல் திண்ணை

---

**நல்ல குடும்பம் சுக வாழ்வு**

குறிப்பு : படங்களையும், வார்த்தைகளையும் வைத்துப் பேசவும்.



சமையல்
கூடம்
விளக்கு
செம்பு
கரண்டி

அகப்பை அம்மி குழவி
அடுப்பு நெருப்பு உப்பு
சட்டி பானை விறகு
உரல் உலக்கை முறம்

---

கல் அம்மி மண் பானை
இரும்பு உலக்கை மர உரல்

எதிர்ப்பதங்கள் :

| | | | |
|---|---|---|---|
| கனம் | இலேசு | மேடு | பள்ளம் |
| சரி | தப்பு | சுத்தம் | அசுத்தம் |



பாடசாலை பெண்கள்
உபாத்தியாயர் சட்டை
சடை பொத்தான்
பாவாடை வளையல்
பேனு மைக்கூடு
புத்தகம் பென்சில்
நாற்காலி கெடிகாரம்

---

புத்தகம் படி
பாப்பா பாவாடை
பொன் வளையல்
கருப்பு மைக்கூடு



ஊர் வீதி வீடு கடை
பந்து ஊசி ரப்பர்
பூந்தி வடை லட்டு
காகிதம் அல்வா துட்டு
காப்பி வெற்றிலை பாக்கு

---

லட்டு வாங்கு கடை வீதி
துட்டுத் தா காகிதம் எழுது



பூமி பகல் சூரியன்

மலை இரவு சந்திரன்

ஆறு மேகம் வெள்ளி

குளம் மழை தண்ணீர்

---

சூரியன் வெளிச்சம் சூடு.

சந்திரன் வெளிச்சம் குளிர்ச்சி.

காற்று அடித்தால் மேகம் கூடும்.

மழை பெய்தால் பயிர் விளையும்.

பறவைகள்

கோழி
வாத்து
கிளி
மயில்
காகம்
புறா



மிருகங்கள்

யானை
பசு
நாய்
பன்றி
எருமை
ஒட்டகம்



இவை ஒவ்வொன்றின் படத்தைக் காட்டு.

கிளி பேசும். பசு பால் தரும்.
காகம் கரையும். நாய் குரைக்கும்.

## ஓரெழுத்துச் சொற்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கை | சை | தை | பூ | பை | மை |

## ஈரெழுத்துச் சொற்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| கிளி | ஏழு | உளி | தேள் | குடை |
| புலி | ஊசி | கூழ் | வேலி | சோறு |
| எலி | பாய் | வால் | ஆறு | ஆமை |

## மூவெழுத்துச் சொற்கள்

| | | |
|---|---|---|
| ரசம் | பட்டு | பூரான் |
| சீப்பு | குயில் | துண்டு |
| குச்சி | கழுகு | முண்டு |
| கத்தி | கயிறு | பலகை |
| கம்பி | காப்பி | தேயிலை |
| சங்கு | கன்று | முட்டை |

## நாலெழுத்துச் சொற்கள்

| | | |
|---|---|---|
| சிலந்தி | எறும்பு | பித்தான் |
| குழம்பு | விளக்கு | பாயசம் |
| சங்கிலி | கடவுள் | படுக்கை |
| உடும்பு | ஒன்பது | தண்ணீர் |
| அப்பம் | இரண்டு | ஊறுகாய் |

எலி
ஓணான்
பாம்பு



ஊர்வன

நண்டு
மீன்
தவளை



நீரில் வாழ்வன

இந்தப் பெயர்களின் படங்களைக் காட்டு :

---

ஓணான் ஓடும். மீன் நீந்தும்.
பாம்பு ஊரும். நண்டு நகரும்.

விட்ட எழுத்துக்களைச் சேர்த்து வாசி :

ப — றி  
நண் —  
காக —  
ம — ல்

எ — மை  
பா — பு  
கோ —  
தவ —

| | |
|---|---|
| ஊ | ர் |
| பே | |
| வே | |
| கூ | |

## மரங்கள்





| | | |
|---|---|---|
| மாமரம் | பலாமரம் | புளியமரம் |
| மாங்காய் | பலாக்காய் | புளியங்காய் |
| மாம்பழம் | பலாப்பழம் | புளியம்பழம் |

## பூக்கள்





| | | |
|---|---|---|
| வாழைப்பூ | ரோஜாப்பூ | மல்லிகைப்பூ |
| வாழைக்காய் | வெள்ளைரோஜா | அந்திமல்லிகை |
| வாழைப்பழம் | மஞ்சள்ரோஜா | பவளமல்லிகை |

---

தாமரைப்பூ அழகுள்ளது.
மல்லிகைப்பூ மணமுள்ளது.
ரோஜாப்பூ வாசமுள்ளது.

## காய்கள்







| | | |
|---|---|---|
| தேங்காய் | கத்தரிக்காய் | பூசணிக்காய் |
| இளநீர் | கண்டங்கத்தரி | பூசணிப்பழம் |
| தென்னமரம் | கத்தரிச்செடி | பூசணிக்கொடி |

## கிழங்குகள்





கருணைக்கிழங்கு உருளைக்கிழங்கு

---

தேங்காய் ஆரஞ்சு மரத்தில் காய்க்கும்.
கத்தரி மிளகாய் செடியில் காய்க்கும்.
பூசணி திராட்சை கொடியில் காய்க்கும்.
கிழங்கு வகைகள் பூமியில் விளையும்.

## அவயவங்கள்

| | | |
|---|---|---|
| தலை | பற்கள் | இதயம் |
| நெற்றி | நாக்கு | மார்பு |
| புருவம் | கழுத்து | வயிறு |
| கண் | தோள் | கால் |
| காது | கை | முழங்கால் |
| மூக்கு | முழங்கை | பாதம் |
| வாய் | மயிர் | விரல் |



## இதன்படி செய்:

| | | |
|---|---|---|
| கண் திற. | மூக்கு பார். | முதுகு காட்டு. |
| வாய் மூடு. | மார்பு விரி. | மூச்சு விடு. |
| காது தொடு. | விரல் நீட்டு. | கால் ஆட்டு. |
| தலை குனி. | கை வீசு. | வேலை செய். |



பூனை சிறியது.

இது சாம்பல் நிறம்.



யானை பெரியது.

இது கருப்பு நிறம்.



கொக்கு உயரமானது.

இது வெள்ளை நிறம்.



குருவி குட்டையானது.

இதன் வாய் குறுகியது.



தட்டு அகலமானது.



தடி நீளமானது.



பேனா கட்டையானது.



இது மோட்டார் வண்டி.

அது புகை வண்டி.





இது என்ன?

இது சைக்கிள் வண்டி.



அது என்ன?

அது குதிரை வண்டி.



எது ரிக்ஷா வண்டி?

இது ரிக்ஷா வண்டி.



எது மாட்டு வண்டி?

அது மாட்டு வண்டி.

குறிப்பு: இவ்வண்டிகளைப் பற்றிய விஷயங்களைக் கதை போலக் குழந்தைகளுக்குச் சொல்லவும்.



நாய் ஓடுகிறது.



நாய்கள் ஓடுகின்றன.



குதிரை நிற்கிறது.



குதிரைகள் நிற்கின்றன.



பையன் படிக்கிறான்.



பையன்கள் விளையாடுகிறார்கள்.

பூர்த்தி செய் :

பையன் — .
நாய் — .
பையன்கள் — .
குதிரைகள் — .



இது என்ன?

**இது ஒரு ஈ.**



அவை யாவை?

**அவை ஈக்கள்.**



இது என்ன?

**இது ஒரு கண்.**

அவை யாவை?

**அவை கண்கள்.**





எது மோதிரம்?

**இது மோதிரம்.**

எவை மோதிரங்கள்?

**அவை மோதிரங்கள்.**



---

ஈக்களை விரட்டு.
மோதிரம் வாங்கு.

கண் திற.
மோதிரம் அணி.



அறையின் நடுவில் மேசை இருக்கிறது.
மேசையின் மேலே பெட்டி இருக்கிறது.
,, கீழே புத்தகம் இருக்கிறது.
பெட்டியின் உள்ளே பேனா இருக்கிறது.
,, பக்கத்தில் மணி இருக்கிறது.
மேசையின் பின்னால் நாய் நிற்கிறது.
,, முன்னால் பூனை ஓடுகிறது.
சன்னலுக்கு வெளியே செடி இருக்கிறது.

---

பெட்டியின் பக்கத்தில் இருப்பது என்ன ?
மேசைக்கு முன்னால் எது ஓடுகிறது ?



நிலா நிலா ஓடி வா
நில்லாமல் ஓடி வா
மலைமேலே ஏறி வா
மல்லிகைப் பூக்
கொண்டு வா.

காக்கா காக்கா
பறந்து வா
கண்ணுக்கு மை
கொண்டு வா.





வெள்ளைப் பசுவே
விரைந்து வா.
பிள்ளைக்குப் பால்
கொண்டு வா.

கோழி கோழி கூவி வா.
குழந்தைக்குப் பூக்
கொண்டு வா.



| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ |
|---|---|---|---|---|---|---|
| க | கா | கி | கீ | கு | கூ | கெ |
| ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ |
| ச | சா | சி | சீ | சு | சூ | செ |
| ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ |
| ட | டா | டி | டீ | டு | டூ | டெ |
| ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ |
| த | தா | தி | தீ | து | தூ | தெ |
| ந | நா | நி | நீ | நு | நூ | நெ |
| ப | பா | பி | பீ | பு | பூ | பெ |
| ம | மா | மி | மீ | மு | மூ | மெ |
| ய | யா | யி | யீ | யு | யூ | யெ |
| ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ |
| ல | லா | லி | லீ | லு | லூ | லெ |
| வ | வா | வி | வீ | வு | வூ | வெ |
| ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ |
| ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ |
| ற | றா | றி | றீ | று | றூ | றெ |
| ன | னா | னி | னீ | னு | னூ | னெ |

| ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | ஃ |
|---|---|---|---|---|---|
| கே | கை | கொ | கோ | கௌ | க் |
| ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ | ங் |
| சே | சை | சொ | சோ | சௌ | ச் |
| ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ | ஞ் |
| டே | டை | டொ | டோ | டௌ | ட் |
| ணே | ணை | ணொ | ணோ | ணௌ | ண் |
| தே | தை | தொ | தோ | தௌ | த் |
| நே | நை | நொ | நோ | நௌ | ந் |
| பே | பை | பொ | போ | பௌ | ப் |
| மே | மை | மொ | மோ | மௌ | ம் |
| யே | யை | யொ | யோ | யௌ | ய் |
| ரே | ரை | ரொ | ரோ | ரௌ | ர் |
| லே | லை | லொ | லோ | லௌ | ல் |
| வே | வை | வொ | வோ | வௌ | வ் |
| ழே | ழை | ழொ | ழோ | ழௌ | ழ் |
| ளே | ளை | ளொ | ளோ | ளௌ | ள் |
| றே | றை | றொ | றோ | றௌ | ற் |
| னே | னை | னொ | னோ | னௌ | ன் |

## நிறங்கள்

1. பால் வெள்ளை நிறம்.
2. இரத்தம் சிவப்பு நிறம்.
3. இலே பச்சை நிறம்.
4. தங்கம் மஞ்சள் நிறம்.
5. காகம் கறுப்பு நிறம்.
6. ஆகாயம் நீல நிறம்.

## நிறங்களைப் பூர்த்தி செய்:

| | |
|---|---|
| 1. புல் —. | 4. ஆலம் பழம் —. |
| 2. யானை —. | 5. நாவற் பழம் —. |
| 3. தங்கம் —. | 6. சுண்ணாம்பு —. |

## சுவைகள்

| | |
|---|---|
| மாம்பழம் | இனிக்கும். |
| எலுமிச்சம்பழம் | புளிக்கும். |
| பாகற்காய் | கசக்கும். |
| கடுக்காய் | துவர்க்கும். |
| மிளகாய் | எரிக்கும். |
| உப்பு | கரிக்கும். |





## நற்பழக்கம்

கடவுளை வணங்கு.
குருவைப் பணி.
தாய்சொல் தட்டாதே.
தந்தைசொல் கேள்.
உண்மை பேசு.
ஈயைப் பிடிக்காதே.
நாயை அடிக்காதே.
சோம்பல் அகற்று.
ஒருவரையும் வையாதே.
நல்லவருடன் சேர்.

## சுகாதாரம்

காலையில் எழு.
மலசலம் கழி.
தினமும் குளி.
துவைத்துக் கட்டு.
பசித்தபின் புசி.

அளவறிந்து உண்.
சுத்த நீர் குடி.
ஈரத்தில் நடவாதே.
எச்சில் துப்பாதே.
இரவில் தூங்கு.

ஆண் பெண் இராஜா இராணி

## நமக்காக உழைப்பவர்கள்



நூல் நூற்கிறாள்.
நூலினால் கதர் ஆடை
நெய்யலாம்.

கூடை முடைகிறான்.
கூடையில் பழம்
வைக்கலாம்.

பாய் பின்னுகிறான்.
பாய் திரையாக
உதவும்.

கீற்று முடைகிறான்.
கீற்றினால் கூரை
வேயலாம்.

பெட்டி செய்கிறான்.
பெட்டியில் ரூபாய்
வைக்கலாம்.

நாம் கதர் ஆடை கட்டுவோம்.

சின்ன சின்ன பாத்திரம்
சிங்காரப் பாத்திரம்
வாய் உள்ள பாத்திரம்
வாகான பாத்திரம்
மூக்குள்ள பாத்திரம்
பால் ஊட்டும் பாத்திரம்





கை உண்டு விரல் இல்லை
கழுத்து உண்டு தலை இல்லை
பை உண்டு பணம் இல்லை
மார்பு உண்டு மூச்சு இல்லை.

கறுப்புச் சட்டைக்காரன்
காவலில் கெட்டிக்காரன்.



| | | | |
|---|---|---|---|
| கனம் | இலேசு | நல்லது | கெட்டது |
| பெரிது | சிறிது | நீளம் | குட்டை |
| மேடு | பள்ளம் | சுத்தம் | அசுத்தம் |
| சரி | தப்பு | உயரம் | குள்ளம் |



## நல்ல பையன்

1. இந்த நல்ல பையனைப் பார்.
2. இவன் பெயர் ராமன்.
3. காலையில் எழுந்திருப்பான்.
4. கை கால் சுத்தம் செய்வான்.
5. கடவுளை வணங்குவான்.
6. பாடங்களைச் சரியாகப் படிப்பான்.
7. தினமும் பள்ளிக்கூடம் போவான்.
8. வழியில் விளையாட மாட்டான்.
9. வகுப்பில் முதல் பையன்.
10. இவன் உண்மையே பேசுவான்.
11. இவனைப்போல் நீங்கள் இருக்கவேண்டும்.

---

| | | | |
|---|---|---|---|
| நல்ல | சரியாக | தினமும் | வகுப்பில் |
| உள்ளம் | வழியில் | வணங்கு | விளையாட |



இந்தப் படத்தில் என்ன பார்க்கிறாய்?
ஒரு தகரக் கொட்டகை பார்க்கிறேன்.
கொட்டகையின் முன்னால் இருப்பது என்ன?
ஒரு மரம் நிற்கிறது.
பின்னால் என்ன இருக்கிறது?
ஒரு செக்கு இருக்கிறது.
அதன் முன்புறம் என்ன பார்க்கிறாய்?
செக்கில் மாடுகள் பூட்டி இருக்கின்றன.
அவற்றின் பின்னால் இருப்பவன் யார்?
ஒரு பையன் உட்கார்ந்திருக்கிறான்.
அவன் என்ன செய்கிறான்?
அவன் மாடுகளை ஓட்டுகிறான்.
செக்குச் சுற்றுகிறது.
பின்புறம் நிற்பவன் என்ன செய்கிறான்?
அவன் எண்ணெய் ஆட்டுகிறான்.

| | | | | |
|---|---|---|---|---|
| பூட்டி | முன்னால் | ஓட்டுகிறான் | எண்ணெய் | உட்கார்ந்து |
| செக்கு | பின்னால் | ஆட்டுகிறான் | கொட்டகை | சுற்றுகிறது |

வருகிறது ! வருகிறது !!

# தீபாவளிப் பண்டிகை

நல்ல நல்ல துணிகள்

கதர்த் துண்டுகள்

பட்டுப் புடவைகள் விலை சகாயம்

இடைக்குமிடம்:

ராமா அண் கோ, மதுரை.

---

வாருங்கள் வாருங்கள்



மதுரையில்

# சித்திரைத் திருவிழா

தேர்க் காட்சி பாருங்கள்.

வண்டிகள் இடதுபுறம் போக.

---

தீபாவளிப் பண்டிகை விடுமுறை நாள்.
நான் எங்கள் ஊருக்குப் போவேன்.
சித்திரைத் திருவிழா விடுமுறை நாளில்
நான் திருவிழாப் பார்க்கப் போவேன்.



# கோழி

கோழீ கோழீ வா வா
கொக்கோ கோ என்று வா

கோழீ ஓடி வா வா
கொண்டைப் பூவைக் காட்டு வா.

குத்திச் சண்டை செய்யவோ
குப்பை கிண்டி மேயவோ

கத்தி போலுன் கால் விரல்
கடவுள் தந்து விட்டனர்.

காலை கூவி எங்களைக்
கட்டில் விட்டெழுப்புவாய்

வேலை செய்ய ஏவுவாய்
வெற்றி கொண்ட கோழியே.

— தேசிக விநாயகம் பிள்ளை.



பையா, இங்கே வா. ஐயா வருகிறேன்.
நீ எங்கே போனாய்? நான் அங்கே போனேன்.
அவன் பெயர் என்ன? அவன் பெயர் இராமன்.
இவன் பெயர் என்ன? இவன் பெயர் வேலன்.
உன் பெயர் என்ன? என் பெயர் குமரன்.
எவன் சீலன்? அவன் இங்கே இல்லை.
இராமன் என்ன செய்கிறான்? படிக்கிறான்.
வேலன் என்ன செய்கிறான்? படிக்கிறான்.
இராமனும், வேலனும் படிக்கிறார்கள்.
நேற்றுப் பாடம் படித்தார்களா? படித்தார்கள்.
நாளைக்குப் படிப்பார்களா? படிப்பார்கள்.

---

| | | | |
|---|---|---|---|
| என் | நான் | அவன் | அங்கே |
| யார் | ஐயா | இவன் | இங்கே |
| எவர் | நீ | எங்கே | அவர்கள் |
| உன் | எவன் | பையா | இவர்கள் |

அவர்கள் யார்? அவர்கள் மாணவர்கள்.

இவர்கள் உனக்குச் சொந்தமா?

ஆம்; இவர்கள் எனக்குச் சொந்தம்.

எவர் உங்கள் தந்தையார்?

செல்லம் பிள்ளை எங்கள் தந்தையார்.

யார் உங்கள் தாயார்? சீதை எங்கள் தாயார்.

அவள் எங்கே யிருக்கிருள்? வீட்டிலிருக்கிருள்.

அவளுக்கு எத்தனை பிள்ளைகள்?

மூன்று பிள்ளைகள்.

எவளுக்கு மகள் உண்டு?

நீலிக்கு மகள் உண்டு.

வேலனும், நீயும் எங்கே போகிறீர்கள்?

நாங்கள் விளையாடப் போகிறோம்.

நீங்கள் எப்போது வெளியே போவீர்கள்?

நாங்கள் மாலையில் வெளியே போவோம்.

நான் வருகிறேன். நாம் போவோம்.

---

| | | | |
|---|---|---|---|
| நாம் | எங்கள் | உனக்கு | பிள்ளைகள் |
| மகள் | உங்கள் | வெளியே | போவோம் |
| எவள் | எனக்கு | விளையாட | இருக்கிருர் |
| தாயார் | நாங்கள் | எப்போது | தந்தையார் |



## நரியும் திராட்சைப்பழமும்

ஒரு — பசியால் — திரிந்தது.
முடிவில் — தோட்டத்திற்கு —.
அங்கே — கொடியில் — கண்டது.
ஆ ஆ — அழகாக — என்று —.
அவைகளைத் — என் — தீர்ப்பேன்
— நினைத்து — தாவியது.
திராட்சை — இருந்தது — எட்டவில்லை.
நரி — மறுபடியும் — பார்த்தது.
அதற்கு —. அதனால் — களைப்புற்றது.
இந்தப் பழம் — எனக்கு — வேண்டாம்
என்று — ஓடிவிட்டது.

---

கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களைச் சேர்த்துக் கதையைச் சொல்லு.



அம்மா அப்பா பெரியவரே,
ஆடை உணவு அளிப்பவரே,
இனிய மொழிகள் சொல்பவரே,
ஈசன் பாதம் பணிவோமே;
உண்டு உடுத்துக் களித்திடுவோம்;
ஊஞ்சல் ஆடிப் பாடிடுவோம்;
எண்ணும் எழுத்தும் கற்றிடுவோம்;
ஏவாமற் பணி செய்திடுவோம்;
ஐந்தும் ஆறும் கூட்டிடுவோம்;
ஒற்றுமை யாகச் சேர்ந்திடுவோம்;
ஓதி யுணர்ந்து மகிழ்ந்திடுவோம்;
ஔவை மொழியை அறிந்திடுவோம்;
அம்மா அப்பா வணங்கிடுவோம்.





புஷ்பம் ஜவஹர்







ஸ்ரீதேவி ஸாது பக்ஷி

| | | |
|---|---|---|
| புருஷர் | ஹைதர் | ஸர்ப்பம் |
| பாஷை | ஹேது | பக்ஷம் |
| ஜட்கா | ஸாகரம் | க்ஷேமம் |

# ஷ ஜ ஹ ஸ க்ஷ

**மஹாத்மா காந்தி பெரியார்.**
**சரோஜினி தேவி கவியரசி.**
**ஜவஹர்லால் நேரு சிறந்த வீரர்.**
**வல்லபாய் படேல் மிக்க வல்லவர்.**

## எண்கள்

| | | | |
|---|---|---|---|
|  | 1 ஒன்று |  | 6 ஆறு |
|  | 2 இரண்டு |  | 7 ஏழு |
|  | 3 மூன்று |  | 8 எட்டு |
|  | 4 நான்கு |  | 9 ஒன்பது |
|  | 5 ஐந்து |  | 10 பத்து |



காந்தித்தாத்தா நல்ல காந்தித்தாத்தா-நாட்டின்
நலத்திற் கவதரித்த காந்தித்தாத்தா

அந்தியும் பகலும் நல்ல காந்தித்தாத்தா-நாட்டில்
அறிவு புகட்ட வந்த காந்தித்தாத்தா

சுதந்திரம்-பெற்றிடவே காந்தித்தாத்தா-நாளும்
துன்பமிக வேயடைந்தீர் காந்தித்தாத்தா

உண்மை நெறியுரைத்த காந்தித்தாத்தா
உலகத்திற் புகழ்பெற்ற காந்தித்தாத்தா

சுதந்திரம் வாங்கித்தந்தீர் காந்தித்தாத்தா-நாங்கள்
சுகமாக வாழ்ந்திடவே காந்தித்தாத்தா

பக்தியுட னேநாளும் காந்தித்தாத்தா-இந்தப்
பாரில் உமைத்துதிப்போம் காந்தித்தாத்தா

## வாரத்தின் நாட்கள் 7

1. ஞாயிறு
2. திங்கள்
3. செவ்வாய்
4. புதன்
5. வியாழன்
6. வெள்ளி
7. சனி

## தமிழ் மாதங்கள் 12

1. சித்திரை
2. வைகாசி
3. ஆனி
4. ஆடி
5. ஆவணி
6. புரட்டாசி
7. ஐப்பசி
8. கார்த்திகை
9. மார்கழி
10. தை
11. மாசி
12. பங்குனி

## இங்கிலீஷ் மாதங்கள் 12

1. ஜனவரி
2. பிப்ரவரி
3. மார்ச்சு
4. ஏப்ரல்
5. மே
6. ஜூன்
7. ஜூலை
8. ஆகஸ்டு
9. செப்டம்பர்
10. அக்டோபர்
11. நவம்பர்
12. டிசம்பர்